Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 32—No. 3



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்கடன்னடி யேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விளம்பி பங்குனி 1959 மார்ச் | இதழ் 3

உ ள் ளு றை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா 4

## ஞானியார் அடிகள் நினைவுநாள்

திருமயிலைக் கபாலீச்சரத்தில் 16-2-59 திங்கட்கிழமை மாலை 7 மணிக்கு, அமைச்சர் திரு. எம். பக்தவத்சல முதலியார் அவர்கள் தலைமையில், சமாஜத்தின் சார்பில் "ஞானியார் அடிகள் நினைவுநாள்" கொண்டாடப்பட்டது.

திரு. சித்தாந்த சிகாமணி - க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி. அவர்கள் ஞானியாரடிகள் சொற்பொழிவுத் திறனைச் சொல்லும்போது, "ஏனைய சமயங்களில் தமது கடவுளரை உபசாரத்திற்கு அவதாரம் செய்தனர் என்பர்; ஆனால் சைவ சமயம் உபசாரத்திற்கேனும் சிவபிரான் பிறந்தானெனக் கூறுவதில்லை" என்று கூறிய நயத்தை எடுத்துக் காட்டினார்கள். பிறகு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் அவர்களும் ஞானியாரடிகளைப் பற்றித் தமது அனுபவங்களை எடுத்தோதினார்கள். திரு ச. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. நல். முருகேச முதலியாரவர்களும் ஞானியார் அடிகளைக் குறித்துத் தத்தம் அனுபவங்களை எடுத்துப் பேசினார்கள்.

நன்றியுரை வழங்கும்போது உதவிச் செயலாளர் தற்காலத் துரிதநிலையில் சாத்திரக் கருத்துகளை, ஆசிரியர்களிடத்திருந்து கேட்க வாய்ப்பின்மையின், தம்தம் இல்லங்களிலிருந்தே அக்கருத்துகளைப் படித்துணர்ந்துகொள்ளச் சமாஜம் அடக்கவிலையில் வெளியிட்டுள்ள "ஞானியார் அடிகள் நினைவு மலர்" என்னும் 300 பக்கங்கொண்ட புத்தகம் பெரிதும் பயன்படும் என எடுத்துக் காட்டினார்கள். வாழ்த்தொலியுடன் விழா இனிது முடிந்தது.

---

## செய்திகள்

சமாஜத் தலைவர் திரு. நல். முருகேச முதலியார் அவர்களின் புதல்வர் M. ஜயவேலு B.Sc. அவர்களது திருமணம் 9-2-1959, சென்னை மியூஸியம் ஹாலில் நடைபெற்ற போது, சமாஜத்தின் சார்பில் மணமக்களுக்கு வாழ்த்துரை வழங்கப்பெற்றது.

பொதுநிலைக்கழகம், பல்லாவரம்: 6-2-59 அன்று பேராசிரியர் புலவர் மயிலை சிவமுத்து அவர்களின் தலைமையில்,

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாளியை உள்நாடு

மலர் 32 | விளம்பி பங்குனி 1959 மார்ச் | இதழ் 3

## தத்துவ விளக்கம்

தி. கி. நாராயணசாமி நாயுடு

இப்பெயர் கொண்ட சைவசித்தாந்தத் தத்துவச் செய்யுள் நூலை 1918ல் செந்தில்நாதையர் உரையுடன் வெளியிட்டார்கள். அப்பதிப்பு, சூரியனார்கோயில் ஆதீனமும், பால்வண்ண முதலியாரும் உதவிய ஏடுகளின் துணையால் வெளிவந்தது. 1924ல் எல். உலகநாதப்பிள்ளை, செந்தமிழ்ச் செல்வி சிலம்பு-2, பக்கம் 131ல், முதல் 23 செய்யுட்களை வெளியிட்டார்கள். இதன் பின்பகுதி வெளிவரவில்லை. இதற்கு மூலம் தஞ்சைச் சரபோஜியின் சரஸ்வதி மகால் ஏடு. இந்த ஏட்டில், இயற்றியவர் காழிக் கண்ணுடைய வள்ளலார் என்று எழுதப்பட்டிருக்கிறது. இந்நூல் சைவ சித்தாந்த உண்மையை உரைப்பது. கட்டளைக் கலித்துறையால் ஆகியது. இந்நூலின் செய்யுட்கள் 51. இவற்றில் 22 செய்யுட்களை மறைஞான சம்பந்தர், நிரம்ப வழகியர் தனித்தனியே இயற்றிய சித்தியார் உரைகளிலும், மதுரைச் சிவப்பிரகாசர் 1488ல் செய்த சிவப்பிரகாசத்தின் உரையிலும், நமச்சிவாயத் தம்பிரானார் இருபா இருபஃது உரையிலும், வெள்ளியம்பல வாணர் இயற்றிய முத்தி நிச்சயப்பேருரையிலும் 38 இடங்களில் மேற்கோளாகக் காட்டி இருக்கிறார்கள். செய்யுள் எண்படி விளக்கம் வருமாறு :—

3. மறைஞான சம்பந்தர் சித்தியார்-2, உரை*(பக்-16); முத்தி நிச்சயப்பேருரை† (பக்-31).
9. சிவப்பிரகாசம் 16, 69க்கு மதுரைச் சிவப்பிரகாசர் உரை‡ (பக்-766, 963).
11. நிரம்பவழகியார் சித்தியார் 56 உரை ;* பக் - 211.
12, 14, 15. மது. சிவ. சிவப். 8, 16, 26 ; பக் - 738, 740, 768, 816.
16. நிரம்ப. சித்தியார் 125 ; பக் - 419.
17, 18. மது. சிவ. சிவப் - 8 ; பக் - 740, 741.
19. மது. சிவ. சிவப். 20, 33 ; பக் - 789, 844 நமச் சிவாயத் தம்பிரான் இருபா இருபஃது உரை பக் - 706.
சிவப். 20க்கு மறை. சம். பக் - 574.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 20.மது.சிவ.சிவப். | 20; | பக் - 789 | மறைசம். பக்-574. | | |
| 21. | ,, | 32 | 839 | ,, | 574. |
| 22. | ,, | 32 | 839 | ,, | 574. |
| 26. | ,, | 21 | 793 | ,, | |
| 27. | ,, | 21 | 793 | நிரம்ப. சித்தி. 84. பக் - 292. | |

35. நிரம்ப. சித்தி. 145. பக் - 480
36. மது. சிவ. சிவப். 26. பக் - 815

| | | | | |
|---|---|---|---|---|
| 37. | ,, | 42 | ,, | 870 |
| 38. | ,, | 27 | ,, | 821 |
| 47. | ,, | 22, 33 | ,, | 803, 844, 846. |

49. முத்தி நிச்சயப் பேருரை பக் - 217, 218, 280.
51. மது. சிவ. சிவப். 2. (723); 19 (786); 50 (898); 75 (976).

---

*திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பு - 1957.
†தருமை ஆதீனப் பதிப்பு - 1946.
‡சித்தாந்த சாத்திரம் சமாஜப் பதிப்பு - 1940.

பெருந்திரட்டில் *354, 438, 560ம் பக்கங்களில் 1606, 2052, 2696ம் செய்யுட்கள் தத்துவ விளக்கத்தில் எடுக்கப் பட்டதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. 2052, 2696ம் பாட்டுக் கள் தத்துவராயர் அடங்கன் முறையில் தத்துவ விளக்கம் கூறும் வெண்பா அந்தாதியின் முறையே †82, 63-ம் பாட்டு கள். 1606ம் பாட்டு, இடம் விளங்கவில்லை. இங்கு வெளி யிடும் தத்துவ விளக்கமூலம், தஞ்சை சரஸ்வதிமகால் ஏட்டினைப் படி எடுத்து, அதனைப் பெரிதும் ஒட்டி எழுதியது. மேற்கோளாக வந்த இடங்களிலுள்ள மூலபாட வேறுபாடு கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. இதனை அடுத்து மதுரைச் சிவப்பிரகாசர் குறிப்பிடும் திருநெறி விளக்கம் வரும்.

சித்தத் துவந்தமக் கின்பம் படச்சென்னி மேலிருந்தும்
எத்தத்து வங்கட்கும் மேலா வனஇய லார்பசுநாற்
கொத்தத்து வந்து குறுகா தனகொச்சை மன்னவன்றாள்
இத்தத் துவவிளக் கம்பகர் வான்பணிந் தேத்துவமே. 1

மேடுங் குழியும் விழுந்தேன் விழுங்க வெழுந்துவிண்ணைக்
கூடும் பொழிற்கொச்சை வேந்தன் குரைகழற் கன்பர்குன்றுங்
காடுங் கடுஞ்சுர முங்கட லேழுங் கடந்தரிதிற்
றேடும் பொருளினுஞ் சேர்ந்தவுற் றாரினுஞ் சீரியரே. 2

சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமங்கற்
றாராய் வதுவட சொற்பயின் றார்க்கெளி தஅம்மொழியைச்
சாரா தவரவருந் தத்துவ ஞானந் தலைப்படுதற்
கோரார் தமிழ்ச்செய்யு ளான்மைய தீர வெழுதுவனே. 3

எழுமென தாசை முடித்தற் குளவெழு தாமறையும்
வழுதிதன் கூனு நிமிரவந் தாண்டன வையமுய்யக்
கழுமல வாணருந் தேவியுங் கண்டுதங் கண்களிப்பச்
செழுமலர் வாவிக் கரையினின் றாடிய சிற்றடியே. 4

*கோ. வடிவேல் செட்டியார் பதிப்பு—1912.

†சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடத்துப் பதிப்பு—1926.

சிற்கனன் றன்னிக ரின்றிப் பரந்தோன் சிதைவறியா
ஒற்கமி லேற்றத் துயர்ந்தோ னுறுதுகளொன் றுமில்லோன்
சொற்கலை ஞாலத்து வித்தா யவன்றுற வெங்குமில்லோன்
நற்கரு ணாலயன் வாழிதென் காழி நயந்தவனே. 5

நயந்த பிறப்பொடு நாசமில் லாதது நாடினர்தாம்
வியந்தரு வீடெய்த வீடொன் றிலாதது மிக்கறிவால்
உயர்ந்த துலகங்க ளாக்குந் தொழில துயர்தரங்கக்
கயந்திகழ் காழிப் பிரானெளி யாகிய காரணமே. 6

*காரண மாகிய காழிப் †பிரானுக் கணுகியிந்தப்
பாரள வாகப் பரக்கும் புவனா திகள்படைப்பப்
பேரள வாகுந் தொழிற்பிற ழாத கருவியதாய்ச்
சீரள வாமனின் னருள்செய்ய தாளென் சிரத்தனவே. 7

தனதுயர் தத்துவந் தான்பரஞ் சத்தி கருவியிப்பால்
வினைதரு வையம் பிறந்தும் விரிந்து மொடுங்குமிந்தச்
சினமலி தத்துவந் தன்னிற் சிரபுர நாதனுமக்
கனமலி பூண்முலை யுங்கருத் தாவுங் கருவியுமே. 8

‡கருமல பாச மசேதனங் கட்டுண்பர் சேதனரென்
றிருமையில் வைய மடங்குமென் றெண்ணுக வித்துணையே
இருமலி யாகமஞ் செப்பிய வான்பொருண் முற்சிறந்த
இருவரு மேகட்டு வார்விடு வாருமென் றெய்துமினே. 9

எய்தும் பொருளொரு மூன்று பதிபசு பாசமென்றே
மெய்தந்த வாகமங் கூறு மிவற்றினுள் வெங்குருவாழ்
மைதங்கு கண்டன் பதிபசு வென்ப தணுக்கள்மற்றைக்
கைதந்த பாசங்க ளாணவ மாயையுங் கன்மமுமே. 10

§கன்மனந் தன்னைக் கனிவிக்கும் காழிப் பிரான்கருணைப்
பன்மைப் படுந்தொழி லைந்து படைப்பு நிலைதொகுத்தல்
இன்மை ¶நிகழ்ந்த வொளிப்புத் துயர்நின் றெடுத்தலென்ப
அன்மைப் படாநிலை மைப்பெரி யோனுக் கமைந்தனவே. 11

---

*காரணனாகிய. செந்தில்நாதையர் பதிப்பு. †பிரான் ககனாதியிந்தப்
‡கருமலிபாசம். மது. சிவ. சிவப்பி. 16 ; பக்-766.
§கன்மந். ¶இழந்த : நிரம்ப. சித். 56 ; பக்-211.

அமையா நிலைமை யணுக்களோர் மூன்று வகையவைதாங்
கமைவா *னிறைந்தவின் ஞான கலர்ப்பிரளை யாகலர்மற்
றிமையா ரிமைப்பவ ராகுஞ் சகல ரிவரின்முன்னோர்
தமையா ரெனின்மல மேயவை சேடித்த தன்மையரே. 12

தன்மை யொழிக்குமப் பாசமுங் கன்மமுஞ் சார்ந்துமற்றைப்
பின்னொரு பாசமில் லார்ப்பிரளை யாகலர் பேசியவக்
கன்மமு மாயையு மாணவ முங்கலந் தார்சகல
ரென்னு மிவரின்முன் னோரிரு பான்மைய ரென்றறியே. 13

அறிந்தவர் தீர்ந்த துகளினர் தீராத் துகளர்முன்னர்ச்
செறிந்தவர் விஞ்சைக்கு நாயக ரெண்ம ரெனச்சிறந்தோர்
†பிறிந்தவர் மந்திர ராமெழு கோடியர் ‡பேரருளான்
மறிந்த திரைப்புனல் வெங்குரு §வாணன் வகுத்தவரே. 14

வகுத்த வரிற்புவ னாதிப ரேனையர் மற்றவர்பின்
றொகுத்த வரிற்பந்த முற்றினர் தூநெறிச் செல்வர்பின்பால்
மிகுத்தவர் தாம்புரி யட்டகத் தோடும் வினைவழியிற்
பகுத்த பிறப்பிற் சகலர்முப் பாசமும் பற்றினரே. 15

பற்றிய சத்தப் பரிச முருப மிரதகந்தம்
மற்றை மனம்புத்தி யாங்கார மென்றிவை வல்வினையாற்
சுற்றி யமைந்த புரியட் டகமென்று சொல்லுவர்வான்
பெற்றி ¶யமைந்த பிரமா புரந்தொழப் பெற்றவரே. 16

பெற்ற தவப்பய னாற்ப்ரளை யாகல ரிற்சிலரைக்
குற்றமில் மந்திர நாயக ராக்குமெங் கோச்சையர்கோன்
மற்றவர் மண்டல[ர் க்ரோதா திபர்] வீரர் சீகண்டர்சீ
ருற்ற வுருத்திர $ரெட்டொடு பத்துநூ றெண்ணிவர்க்கே. 17

---

*நிறைந்த : மது. சிவ. சிவப். 16 ; பக்-768.
†பிறந்தவர் : பிறிந்தவர். மது. சிவ. சிவப். 26 ; பக்-816.
‡பேரொலியா.
§வாணர் : மது சிவ. சிவப். 8 ; பக்-738.
¶அமைத்த. நிரம்ப. சித்தி. 125 ; பக் - 419.
$எட்டெட்டு ஒன்றொன்று நூறு. செந்தில் காதையர் பதிப்பு. மது. சிவ. சிவப். 8 ; பக்-740.

எண்ணும் வினைப்பய னுற்புவ னந்தோறும் போகமென்று
நண்ணி வருஞ்சக லர்க்கொரு கால நயந்திங்ஙனே
பண்ணிய கன்மந் துலையொத் தழிச்சத்தி பாதமுறக்*
கண்ணிய னுங்குரு வாய்க்காழி வேந்தன் கதிதருமே. 18

கதிதருங் காழிமன் கட்டுமப் பாசங்கள் மூன்றவைதாம்
பொதிதரு மாணவம் போகஞ்செய் கன்மமு மாயையுமா
முதியது தானென்று †முன்பினில் லாதது சேதனன்‡கண்
ணதிக மறைப்பன வாயிர கோடி விருத்திகளே. 19

விருத்திக ளான்மறைக் கின்றவவ் வாணவம் வெங்குருமன்
கருத்திய நூல்முறை தேரிற் கலந்துட னுயனுவை
§யருத்தி [மயக்க]ஞ்செய் மோகஞ்செய் தாசை அனுபவத்திற்
பெருத்திடச் செம்பினிற் காளிதம் போலப் பிணைந்துளதே.

பிணைந்தவப் ¶பாசம் பெருக்கிய வாசை யனுநுகர்தற்
கணைந்தன கன்ம மிருவகைத் தாமறம் பாவமென்ப
தணந்தும்$பிணைந்துந்தன் சார்பினிற் றோன்றுமன் சன்னிதியா
னுணர்ந்தவர் வித்தும் விளைவுமொப் பாமென வோதுவரே.

ஓதிய வல்வினை யூட்டக் கருவி யுடம்புலக
**மாதிமைப் போகமு மாய்நின்ற மாயை ††மயங்குவித்தே
போதந் தரும்பொரு ளாகிநிற் கும்புவ னாதிகளுக்
காதியு மாய்விரிந் தந்தமு மாகி யொடுங்கியதே. 22

ஒடுங்கிய பாசத் தொகையொரு மூன்று முறுதொழிலிற்
றுடங்கிய போது துணைமையிற் றோணி புரத்துறையும்
விடங்கெழு கண்டர்தஞ் சத்திக ளேவலின் மற்றதுவும்
படர்ந்தெழு பாசமென் றூரவை யூக்கஞ்செய் பான்மையரே.

---

*துலையொத்துச் சத்திநிபாதமுறக். மது. சிவ. சிவப். 8 ; பக் - 740.

†முன்னர். ‡காண். மறை. சித்தி. பக்-574.

§யருத்திய. நஞ்சென்ன மது. சிவ. சிவப். 20 ; பக்-789.

¶அக்கன்மம். $மணந்தும். மது. சிவ. சிவப் 32; பக்-839.

**மாதிய. ††மயக்கு. மது. சிவ. சிவப். 32; பக்-839.

பான்மையிற் றத்துவ மைந்தென்பர் சுத்தம் பரமவற்றுட்
சீர்மலி தெய்வச் சிரபுரங் காண்சிவ தத்துவமென்
றோர்மலி கூர்ந்த விறைவியுங் கோனு மிருந்திலரேற்
கூர்மலி சிந்தையி னார்சிவ மாமென்று கூறுவரே. 24

கூறிய வங்கியுங் கோனு மெனக்கொச்சை வேந்தனெங்கு
மாறில னாகி மகிழ்ந்துட னிற்றலின் மற்றதுவும்
வேறின்மை சால விளம்பத் தருமதன் பால்வினையும்
ஆறியல் பாம்அத்து வாதத்து வாகமத் தாய்ந்தனவே. 25

ஆய்ந்தவத் தத்துவ மைந்தா வனசிவ தத்துவத்தோ
டேய்ந்தவச் சத்தி சதாசிவ மீசனும் வித்தையுமென்
றோர்ந்தறி வித்தினுக் குண்ணெகிழ்ப் பானுநற் சத்தியதிற்
போந்தங் குரவனை மைம்முகக் கோனென்று போற்றுவரே.

*போற்றும் பரத்திற் பொதிகின்ற ஞானக் கிரியையொத்துத்
தோற்றுஞ் சதாசிவம் ஞானஞ் சுருங்கித் தொழின்மிகுத்தல்
சாற்று† மகேசம்மெய்ஞ் ஞானந் தழைத்துத் தொழில்குறைதல்
மாற்றரும் வித்தை சிரபுர நாதன் ‡வகுத்தனவே. 27

வகுத்த வினைப்பயன் றுய்த்தற் கணுக்கட்கு மாயையென்னத்
தொகுத்ததி னின்றுங் கலைவருந் தோணிப் பிரானருளால்
மிகுத்துட னாகி மறைக்கு மலத்தின் விருத்திதன்னைப்
பகுத்தெழு விக்குந் தனைச்சிறு பான்மையாற் பையநின்றே.

பையர வின்விடம் பாலடி சிற்பெய்து பாத்திரத்திட்
டையமில் லாரயில் விப்பது போல வணுக்கடம்மை
வெய்ய வினைப்பய னின்னமு தாய்விழை வித்தயிற்றும்
மையுறு சிந்தை மயக்கிய மாயா விகாரங்களே. 29

கார்மரு வும்பொழிற் காழிப் பிரான்கண் ணொழியவொன்றும்
வாரல மாயா விகாரமென் றேயறி வான்கலைப்பாற்
பேரலர் கூர்புந்தி நோக்கப் பிறங்கருட் செல்சுடர்போல்
ஏரொளி வித்தைவந் தெய்துங் கலைபோ லிசைந்துநின்றே.

---

*செந்தில்நாதையர் பதிப்பில் இப்பாடல்பெரிதும் வேறுபடுகிறது.
†அறிவு. ‡வகுத்தனரே. கிரம்ப. சித்தி. 84 ; பக் - 292.

நின்று பிறந்து மெதிர்வது மாய்நிகழ் பல்பொருளோ
டொன்றிய காலமு மாயைதன் பால்வரு முற்றதனுல்
நன்று மெதிர்வது மாகிய போக நயந்தனுக்கட்
கென்றுஞ் செலக்கட் டலிற்கால மாமென் றியம்புவரே. 31

இயம்புஞ் சுகதுக்க மோகமென் றின்னே யெழுமதியை
வயம்பெற நோக்குழி வாய்க்குங் கருவிய தாகும்வித்தை
பயம்பெறு முக்குணப் பான்மையி னல்வந்த பல்பொருளை
நயம்பெற நோக்குமப் புந்தியி னுலென்று நாட்டுவரே. 32

நாட்டிய மாயையி னின்றுநற் காலத் தொடுநியதி
யீட்டிய வல்வினைக் கெய்தும் பயனியல் பாயவற்றிற்
கூட்டியு மல்லன நீத்துங் குறிப்பால் வரைந்துநிற்குங்
காட்டிய மாயைக் கிரண்டுமல் லால்வழி காண்பரிதே. 33

காணப் படுவன வித்தையிற் கண்டுழிக் கண்டதெல்லாம்
பேணித் தனதெனும் பின்ருழ் விழைவு வரைவின்றியே
பூணப் புணர்ப்ப தாாகம் பொதுமையிற் ருேன்றுமென்பர்
ஏணிற் புணர்கஞ் சுகம்அஞ்ச தாமென் றியைந்தனவே. 34

இயைந்தவித் தத்துவ மைஞ்சினு மெஞ்சா வகைப்பிணிப்புண்
டயர்ந்துழிப் பின்னைப் புருட னெனப்பெய ராமனுவென்
றுயர்ந்தவ ரோதுவ ரோதுங் *கலையினின் றுற்பவிக்குந்
†குயந்தரு மூலப் பகுதிய தாமென்று கூறுவரே. 35

கூறிய மூலப் பகுதியிற் ருேன்றுங் குணமவைதாந்
தேறிய சாத்விக ராசத தாமத மென்றுசெப்பும்
ஊறியல் முக்குண மொத்தவை மூன்று முயர்‡விழிவுற்
றேறியக் காற்புத்தி தத்துவ மாகுமென் றெண்ணுவரே. 36

எண்ணிய புத்தியின் முக்குணஞ் §சிரியல் பாற்காந்து
நண்ணிய வாங்கார மூன்றுரு வாமவை நாட்டியபேர்
தண்ணிய தைசத வைகா ரியந்தரு பூதாதியென்
றண்ணல் வகுத்த முதனு னெறிவழி யாய்ந்துகொள்ளே. 37

---

*கலையினது. †குணந்தரு ; (பிரம்ப. சித்தி. 145; பக்-480.)
‡இழிவற்று. மது. சிவ. சிவப். 26 ; பக் - 815.
§சேரியல் பாற். (மது. சிவ. சிவப். 42 ; பக் - 870.)

கொள்ளுமத் தத்துவம் முற்கூ றதிற்செவி யாதிமனம்
எள்ளிய கன்மேந் திரியம்பின் னீனு மிரண்டினிற்பின்
தெள்ளிய தன்மாத் திரைவருஞ் சேர்ந்ததன் மாத்திரையி
லொள்ளிய பூதங்க ளைந்துக்கு மாமென்ப ருற்பவமே. 38

பவந்தரு மம்மனப் பண்பிச்சை பாரிப்ப தாம் விகற்பம்
கவர்ந்தெழு மிந்திரி யங்கள்கண் தோல்செவி மூக்கொடுநா
வியந்தரு ஞானேந் திரியங்கன் மேந்திரி யங்கள்கைகால்
அவந்தரு வாயொடு பாயுரு பத்தமென் றுங்கவையே. 39

ஆங்கவை தன்னில் மனம்புத்தி யாங்காரஞ் சித்தமென்றே
யீங்கிவை யுட்கர ணம்மொரு நான்குமற் றேனையவாத்
தீங்கிவை கின்றன வீரைந்துந் தேரிற் புறக்கரணம்
ஓங்கிய போகத் திவையாங் கருவியென் றுன்னுமினே. 40

உன்னிய சொல்லுச் செவிக்குக்கண் ணுக்குரு வம்பரிச
மன்னிய தோலுக்கு மூக்குக்கு நாற்ற மிரதமென்ப
இன்னிய நாவுக் கியம்பல் நடத்தல் கொடைவிடுதல்
பன்னிய ஆனந்தங் கன்மேந் திரியம் பயின்றனவே. 41

பயில்வுறு சத்தம் பரிச முருவ மிரதம்கந்தம்
இயல்வுறு தன்மாத் திரையைந்து மாவன ஈங்கிவற்றிற்
புயலுறு வான்வளி பொன்று வனல்பொரு நீரொடுமண்
வியலுறு பூதமைந் தும்முறை யாக விளைந்தனவே. 42

விளையுங் குணமொன்றுக் கோரொன்று மேற்படும் விண்முதலாய்
விளையுந் தனையு மிடங்கொடுக் குங்கூட்டும் வெம்மைதரும்
இளகும் பொறுக்கு மடைவே யிவையுயர் வான்முதலாய்
வளையுங் கடற்புவிக் கஞ்சுமெஞ் சாமல் வருந்தொழிலே. 43

தொழிலுறு மாயை தடக்குண்ட சீவனைத் தொக்குநின்றங்
கெழிலுறு மேனி யிருபாற் கரணம் குணமொருமூன்
றொழிவில வாகிச் சுகதுக்க மோக முடன்கொடுத்துக்
கழிபடு துன்பங் களின்பய னாக் கவர்விக்குமே. 44

கவரும் பொருளொன்றைக் கண்முத லாய கரணங்கண்ணுற்
றிவரு மனம்விகற் பிக்குமெஞ் சாதவாங் காரமுந்தான்
பவரும் படியான் எனதெனப் பாவிக்கும் பற்றிமுற்றும்
தவரு மதிமிகத் தேறுமிப் பாலிதன் றன்மையென்றே. 45

என்றுடன் றேறிய புத்திக் கிசைந்த பொருணயந்து
சென்றுந் திரிந்தும் பயில்வுறுஞ் சேதனன் சேதமின்றி
நின்றுண்டு போகத்தை நீக்கிமற் றுண்பன நேடியின்னே
பொன்றும் பிறக்கும் புனற்சுழிப் பட்டதோர் புல்லெனவே.

புல்லிய பாசங்க ளுய்த்திடப் போகம் புமானுகர்ந்து
செல்லிய *காலத் துறுஞ்செல்ல வீக்கிச் சிரபுரக்கோன்
சொல்லிய மண்முத லாயின மாயையி லேதொகுத்தங்
கெல்லியில் நித்திரை போலிளைப் பாற்று மணுக்களையே. 47

களைகண்ண தாஞ்சுத்த தத்துவங் காழியர் கோனருளால்
விளைபுல னுஞ்சத்தி யுள்ளே யொடுங்கிடு மேதகுநாற்
றளைகெழு சத்தி சிவதத் துவந்தன்னி லேயொடுங்குங்
கிளைதரு மாயை சிவத்தோ டணுவுக்குங் கேடில்லையே. 48

இல்லா தனபிறந் துள்ளன மாயுமென் றிம்மயக்க†
நல்லா கமஅறி ஞர்க்கில்லை நாட்டிய தத்துவங்கள்
எல்லா மியம்பு முறையே பிறக்கு மிறக்குமுத்தர்
அல்லா வணுக்கட் கனுபவ ‡காரிய மாகிநின்றே. 49

ஆகுத லாவது தோற்ற மடக்க மழிதலென்றே
நீகூறி யாயெள்ளுமெண்ணெயும்போல்நினை நீண்டகொம்பிற்
கோகுல மார்பொழிற் கொச்சைப் பிரான்கழல் கூட்டுதற்கே
யாகுமென் றேயணுக் கட்கியல் பாகு மனுபவமே. 50

---

*காயத்துறு. (மது. சிவ. சிவப். 22; பக் - 803) ஆனால் பக். 884-ல் சரியாயிருக்கிறது.

†மாமென மயக்கம்.

‡காரியமாகி. (முத்தி. நிச்ச. பேருரை பக்-217, 280) காரண- செந்தில்நாதையர் பதிப்பு.

பவமே வியநெறி பந்திக்கு மீசன் பசுக்கடம்மை
யவமே வியநெறிப் போகங்க ளான்முற்ற வந்திலேயே
தவமே வியநெறி சத்திகண் ணுச்சென்று சார்ந்துபின்னை*ச்
சிவமே வுவரென்று காண்கொச்சை காவலன் சித்திரிப்பே.

—

# பெண் வளர்த்த பாசம்

திருமதி. வ. பா. தாமரைக்கண்ணியம்மையார்

என்னுடன் நெருங்கிய உறவு பூண்ட ஓர் அம்மையார் இருந்தார். பெரிய இடத்தில் பிறந்து, பெரிய இடத்தில் வாழ்க்கைப்பட்டவர். அவருக்கு ஒருவர்பின் ஒருவராக நான்கு பிள்ளைகள் பிறந்தனர். ஆசைக்கு ஒரு பெண் வேண்டுமெனத் தவங்கிடந்தார். தவமும் பலித்தது. அழகெலாம் திரண்டு ஓரிடத்தில் சேர்ந்ததெனச் சொல்லும்படி ஒருபெண் குழந்தை பிறந்தது. அம்மையாருடைய பிள்ளைக்கலியும் தீர்ந்தது. குழந்தையைக் கண்ணுங் கருத்துமாய் வளர்த்தார்.

அந்த அம்மையார் சும்மா இருக்கக்கூடாதா ? அவர் பழங்காலத்தைச் சேர்ந்தவர். பெண்ணுக்கு ஜாதகம் எழுதுமாறு ஒரு சோதிடனைக் கேட்டுக்கொண்டார். சோதிடர்களில் பலவிதம் உண்டு. நாளும் கோளும் தீயவற்றைக் காட்டினாலும், அவற்றை மறைத்து நல்லதையே சொல்லிப் பணமும் நற்பெயரும் சம்பாதித்துக்கொள்பவர்கள் ஒரு சாரார். வேறு சிலர், உண்மையைச் சொல்வதாக நினைத்துக் கொண்டு, கெட்ட பலன்களையும் கூசாமல் சொல்லிவிடுவார்கள். நான் மேலே குறிப்பிட்ட சோதிடன் பிந்திய வகையைச் சேர்ந்தவன். அந்தக் குழந்தைக்குச் சோதிடப் பலன் சொல்லும்போது அவன் நாவில் சனி தங்கியிருந்தது போலும். அந்தப் பெண்ணுக்குப் பதினேழு வயது நடக்கும் போது அவள் காசநோயினால் பீடிக்கப்படுவாளென்றும், அதனால் ஒரு கண்டம் நேரும் என்றும் செவிகசக்கச் சொன்

*பின்னர்ச் (மது. சிவ. சிவப் 2 ; பக் 723) ஆனால் 786, 898, 977-ம் பக்கங்களில் வேறுபாடில்லை.

ஞன். அம்மையார் கேட்டுப் பதைத்துப் போனார். தாம் அரிதிற் பெற்ற ஒரு பெண்ணுக்கா இந்தக் கதி?

சோதிடன் போய்விட்டான். அம்மையார் சிந்தித்தார். தாம் பிறந்த குடும்பத்திலும் புகுந்த குடும்பத்திலும் யாருக்குமே இந்த நோய் வந்ததில்லை. அங்ஙனமாக, தம் பெண்ணை மட்டும் எவ்வாறு இந்த நோய் பிடிக்கும்? சோதிடன் சொன்னது சுத்தப் பொய். அதை மறந்து விடுவதே நல்லது என்னும் முடிவுக்கு வந்து, பெண்ணை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கத் தலைப்பட்டார். எனினும், எப்போதாவது அந்தக் கசப்பான செய்தி மனத்தில் உறுத்தும். பெருமுயற்சி செய்து அந்த எண்ணத்தை மனத்தினின்றும் உதறிவிடுவார்.

அந்தப் பெண் அழகின் கொழுந்தென வளர்ந்து, பதினேழாவது வயதை எட்டிப் பிடித்தாள். தன் ஒரே ஒரு பெண்ணுக்கு எப்படி யெப்படி யெல்லாமோ ஒப்பனை செய்து அழகு பார்த்தாள் அந்தத் தாய். அச்சமயம், பதினேழு ஆண்டுகளுக்கு முன் சோதிடன் கூறிய தீச்செய்தி தாயின் மனத்திலிருந்து அறவே அகன்றுவிட்டதென்று சொல்லலாம்.

ஒரு பகல் தற்செயலாகத் தன் மகள் எச்சில் துப்பியதைத் தாய் பார்த்தாள். சிவப்பு நூலிழை போன்ற ஏதோ ஒன்று அதில் காணப்பட்டது. அதற்கேற்றாற்போல், அச்சமயம் அந்தப் பெண் சிவப்புப் பட்டுச்சேலை உடுத்தியிருந்தாள். சிவப்புப் பட்டு நூல் துண்டு ஒன்று தற்செயலாக எச்சில் கலந்துவிட்டிருக்கலாம் என நினைத்து, அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக ஓர் ஈர்க்கினால் எச்சிலைத் துழாவிப் பார்த்தாள். அது சிவப்பு நூலாய் இராமல், உறைந்துபோன குருதியாகவே இருந்தது. தாய்க்குத் திக்கென்றது. எனினும் தாய்ப்பாசத்தினால் இதை அவள் நம்பவில்லை. தன் மகளின் பற்களுக்கிடையிலிருந்து இக்குருதி வந்திருக்குமே யன்றி, மார்பகத்தின் உள்ளுறுப்புக்களிலிருந்து வந்திருக்க முடியாதெனத் தன்னையே ஆற்றிக்கொண்டாள்.

மறுநாள் காலையில் தன் மகள் துப்பிய எச்சிலில் ஒரு ரூபாய் அளவுக்குச் செங்குருதி கலந்திருப்பதைத் தாய் கண்

டாள். 17 ஆண்டுகட்குமுன் சோதிடன் சொன்னது இப்போது அவள் நினைவுக்கு வந்தது. "ஐயோ மகளே! இதற்காகவா உன்னை இவ்வளவு சீராட்டிப் பாராட்டி வளர்த்தேன்" எனக் கோவென்று அலறித் தன் செல்வியை அணைத்துக் கொண்டாள்.

சோகக் கதையை அதிகம் வளர்த்துவானேன். அவ் விளம் பெண்ணின் முடிவு அவலமாயிற்று.

* * *

பல அழகுகள் செறிந்த காவியம், நாடகம், நாவல் முதலியனவற்றைப் படைக்கும் நல்லிசைப் புலவர்கள் தாங்கள் தோற்றுவிக்கும் கதா பாத்திரங்களின் துன்பங்களில் தாங்களும் பங்கெடுத்துக்கொள்ளும் உருக்கமான காட்சிகளை அடிக்கடிக் காண்கிறோம். இளங்கோ, சேக்கிழார், கம்பர் ஆகியோரின் காவியங்களிலிருந்து இதற்கு நிரம்ப எடுத்துக் காட்டுகள் கூறமுடியும். மெய்ப்பொருள் நாயனார் வரலாறு கூறப்புகுந்த சேக்கிழார், அந்நாயனாரை முத்தநாதன் என்னும் இகலரசன் அற்றம் பார்த்துக் கூர்ங் கத்தியினால் குத்திக் கொன்றான் என்னும் கொடுஞ் செய்தியைத் தம் வாயால் சொல்லக் கூசியவராய், 'தான் முன் நினைந்த அப்பரிசே செய்தான்' என்று முடித்திருப்பதை இங்குக் காட்டுதல் சாலும்.

காவிய ஆசிரியர்களின் மேற்சொன்ன இளகிய மனோநிலைக்கு, திருத்தொண்டர் புராணத்திலுள்ள காரைக்காலம்மையார் வரலாறு ஒரு மலைவிலக்காகத் திகழ்கிறது. அஃது எவ்வாறு என்பதை ஆராய்ந்து அன்பர்களுக்குக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

பல பிள்ளைகளைப் பெற்று ஒரு பெண்ணுக்காகத் தவங் கிடந்த மேற்சொன்ன தாயைப் போலவே, பல நாயன்மார்களின் வரலாற்றை எழுதிய சேக்கிழார், அம்மையார் வரலாற்றினை எழுதும் வாய்ப்பிற்குத் துடியாய்த் துடித்தார். அதை எழுதுவதற்கு அவர் எழுத்தாணிக்கிருந்த தினவு சொல்லி முடியாது. எனினும், சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் அமைத்த வரிசைக்கிரமத்தைத் தானே பின்பற்ற வேண்டும்?

ஆகவே, திருநின்ற சருக்கம் வரும்வரை காத்திருந்தார். திருநாவுக்கரசர், குலச்சிறையார், பெருமிழலைக் குறும்பர் ஆகியோரின் வரலாறுகளை எழுதிமுடித்து, காரைக்காலம்மை யார் வரலாற்றினை ஆர்வம் மீதூர எழுதத் தொடங்கினர்.

இதற்குமுன் அம்மையாரைப் பற்றிச் சேக்கிழார் கட்டிய மனக்கோட்டைகள் பல. அம்மையார்மாட்டுச் சேக்கிழார் பெருமதிப்பு வைத்திருந்தார். சிவநெறிக்கே பெருமை தந்த செந்தமிழ்ச் செல்வி அல்லவா? அற்புதத் திருவந்தாதி, திரு இரட்டை மணிமாலை, மூத்த திருப்பதிகம் ஆகிய ஒப்பற்ற ஞானநூல்களை அருளிய புலவர் பெருமாட்டி யல்லவா? இவர்தம் வாழ்க்கையில் ஒரு குறைவும் இருத்தல் ஆகாது. இவர் கண்டார் கருத்தைக் கவரும் வனப்புடையவராய் இருத்தல் வேண்டும். சைவப் பெண்களுக்கு எடுத்துக்காட் டாய்த் திகழவேண்டும் என்றெல்லாம் சேக்கிழார் எண்ணினர்.

ஆனல், பெரிய புராணத்துக்கு முதனூலாகிய திருத் தொண்டத் தொகையில் அம்மையாரைப் பற்றிச் சுந்தரர் சொல்லும் குறிப்பு சேக்கிழாருக்குப் பெரிய ஏமாற்றத்தைத் தந்தது. "பேயார்" என்பதே அக்குறிப்பாகும். சுருங் கச் சொன்னல், மேற்சொன்ன தாய்க்கு அவள் மகளைப் பற்றிச் சோதிடன் வழங்கிய தீச்சொல்லைப்போல், சுந்தரரது "பேயார்" என்னும் சொல் சேக்கிழார் காதில் விழுந்து, கசப்புணர்ச்சியைத் தந்தது. அம்மையார் பேய் வடிவம் கொண்டவ ரென்பதைச் சேக்கிழாரது உள்ளுணர்வு ஏற்க மறுத்தது. எனினும், மேற்காட்டிய தாய் அந்தச் சோதிடன் சொல்லினல் முதற்கண் அதிக துன்பமடையாததுபோல, சேக்கிழாரும் சுந்தரர் குறிப்பினை ஒருபக்கம் ஒதுக்கிவைத்து விட்டு, "யான் பெற்றெடுக்கப்போகும் பெண்மணி பேய் அல்லள். அவள் பேரழகு நிரம்பியவள். ஞானக்கொழுந்து,எங் களை ஈடேற்ற வந்த பெண்தெய்வம்" என்னும் மன உறுதி யோடு அம்மையாரின் வரலாற்றினை எழுதத் தொடங்குகிறர்.

சேக்கிழாரது இந்த மனஉறுதிக்கு நம்பியாண்டாரு டைய திருத்தொண்டர் திருவந்தாதிப் பாட்டு ஆக்கம் தருவ தாய் அமைந்தது.

“ நம்பன் இருமலே கான்மிதி யேனென்று தாளிரண்டும்
உம்பர் மிசைத்தலே யால்கடந் தேற உமைநகவும், [தேன்
செம்பொன் உருவன் ‘என் அம்மை’ எனப்பெற்றவள்; செழுந்
கொம்பிஞரு காரைக்காலினின் மேய குலதனமே ”

என்பதே அப் பாட்டாகும். தமது அந்தாதியில், மற்ற நாயன்மார்களைப் பற்றிய பாடல்களில் சுந்தரரது திருவாக்கினை அப்படியே எடுத்தாண்ட நம்பியாண்டார், காரைக்காலம்மையாரைப் பற்றிய பாடலில் சுந்தரரைப் பின்பற்றிப் “பேயார்” எனக்குறிப்பிடாமல், “காரைக்காலினின் மேய குலதனம்” என்றுதான் குறிப்பிடுகிறார். ஒருவேளை நம்பியாண்டாரும் சேக்கிழாரது மனநிலையையே பெற்றிருந்தார் போலும்!

இனி, மீண்டும் சேக்கிழாரிடம் வருவோம். பிற நாயன்மார்களது வரலாறுகளைப் பாடும்போது, சுந்தரரது திருத்தொண்டத் தொகைச் சொற்றொடர்களைப் புராணத் தலைப்பிலும், புராணத்திலேயே பல இடங்களிலும் எடுத்துப் பிரயோகிப்பது சேக்கிழாரது வழக்கம். ஆனால், இவ்விதிக்கு ஒரு விலக்காகக் காரைக்காலம்மையார் வரலாறு அமைந்திருக்கிறது. காரணம், அம்மையாரைப் ‘பேய்’ என்று அழைக்கச் சேக்கிழாரது மனம் ஒருப்படவில்லை.

யான் இக்கட்டுரையின் தொடக்கத்தில் எடுத்துக் காட்டிய தாய், சோதிடன் சொல்லைப் புறக்கணித்துத் தன்செல்வ மகளைப் பலவாறாக அழகு செய்து பார்த்து மகிழ்ந்தது போல, சேக்கிழாரும் தம் ஞானச்செல்வியைப் பலவாறாக அழகு செய்து பார்த்து நமக்கும் காட்டுகிறார். அவர் கூறும் ஒவ்வோர் அழகுக் குறிப்புக்கும் நான் விளக்கம் கூறுவதென்றால், இக்கட்டுரை மிகவும் விரிந்துவிடுமென்று அஞ்சுகிறேன். ஆகவே, அக்குறிப்புகளை மட்டும் எழுதி, அவற்றுள் ஒவ்வொன்றும் வரும் பாட்டின் இலக்கத்தை அதன் எதிரே வளைவுக்குறிகளுக்குள் தருவேன்:

மயிலைப் புறங்கொள் மென்சாயல் மழலைக்கிளவி யாழினெடும்
குயிலைப் பொருவும் காரைக்காலம்மை.........

—பெருமிழலைக் குறும்ப நாயனர் புராணம், 11

......திருமடந்தை அவதரித்தா ளெனவந்து
பொங்கியபே ரழகுமிகப் புனிதவதி யார்பிறந்தார்.

—காரைக்காலம்மையார் புராணம், 2

அழகின் கொழுந்தெழுவ தெனவளர்வார் (4)
கல்லென உறுப்புறா லவர்உரைக்கும் கலந்சிரம்பி
மல்குபெரு வனப்புமிக் கூரவரு மாட்சியினல் (6) சேயிழை (7)
பைந்தொடி (8)  தளிரடி மென்னகை மயில் (11)

அரும் புதல்வி (12)  பூங்குழலார் (14)
மணமலியும் மலர்க்கூந்தல் மாதரார் (17)
வெறிமலர்மேல் திருவனையார் (19)
பூப்பயில்மென் குழல் மடவார் (21)
நறுங் கூந்தல் அன்னமனையார் (23)
தாழ்குழலார் (25)  பெய் வளையார் (26)
மொய் தருபூங் குழல்மடவார் (28)
வாசமலர்த் திருவனையார் (29)  அணி குழலவர் (31)
நறுமென் கூந்தல் அணங்கனர் (36)
ஒளிரொளி மணிக்கொம் பன்னர் (40)
மடநடை மயிலன் னர் (42)
தாமரைத் தவிசில் வைகும் தனித்திரு (42)
மொய்குழ லவர் (44)
மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார் (45)
காமர்பூங் கொடியனர் (46)  மன்றலங் குழலினர் (48)

அன்பர்காள் ! சேக்கிழார் காட்டும் அழகுத் தெய்வத்தைப் பார்த்தீர்களா? மாதர்களின் உடலழகை வெறும் புணர்ச்சி தோன்றாமல் எழுதிக்காட்டுவதில் பிற புலவர்கள் சேக்கிழாரிடம் கற்றுக்கொள்ளவேண்டியது எவ்வளவோ இருக்கின்றதல்லவா ?

இங்கே ஒரு புதுமையை நேயர்கள் கவனிக்கவேண்டும். அம்மையாரது பிள்ளைத் திருநாமம் புனிதவதியார் என்பது. அவரைப் பற்றிய முதல் குறிப்பு வரும் 2-வது பாட்டில்தான் அப்பெயர் சொல்லப்படுகிறது. அதற்குப் பிறகு இப்புராணத்தில் 64 பாடல்கள் வருகின்றன. அவைகளில் ஒன்றிலாவது இப்பெயர் வரவேண்டுமே! இல்லவே இல்லை. இது வியப்பாக இல்லையா? ஒரு கதைத் தலைவியின் பெயர் அக்கதையில் ஒரு முறைதானா வரவேண்டும்?

ஊன்றிப் பார்த்தால், இதில் ஒரு வியப்பும் இல்லை. சேக்கிழார் ஓர் அழகியின் கதையை எழுத முனைந்திருக்கிறார். அவளைப்பற்றிப் பேசும்போதெல்லாம், அவள் பெயராகிய 'புனிதவதி' என்னும் சொல்லைப் பெய்துரைத்துவிட்டால், அவள் அழகுடையவளாய் இருத்தலைக் குறிப்பது யாங்ஙனம்? அதனால் அவர் நோக்கம் நிறைவேறாமற் போய்விடுமல்லவா? ஆகவேதான், அம்மையார் பெயரை இன்றியமையாமை கருதி முதன்முறை சொல்லிவிட்டு, மற்ற மற்ற இடங்களை, வனப்பைக் குறிப்பிடும் சொற்றொடர்களை வழங்குவதற்காக வைத்துக் கொண்டார்.

* * *

நான் மேல் எடுத்துக்காட்டிய தாய் தன் மகள் நோய் வாய்ப்பட்டிருத்தலை முதற்கண் அறிந்தபோது அடைந்த மனநடுக்கத்தைச் சேக்கிழார் பெருமான் அடையும் நிலை இப்போது வந்துவிட்டது. புனிதவதியாரின் வரலாறு எழுத வந்தவர், அதை முழுதும் எழுதித்தானே ஆகவேண்டும்? தம் மனத்துக்குக் கசப்பான செய்திகள் அதில் வந்தால் விட்டுவிடமுடியுமா? புனிதவதியாரின் கணவன் அவரைத் தெய்வமென்று கருதி அஞ்சி ஒதுங்கி நின்றான். இதுகாறும் அவனுக்காகத் தாங்கி நின்ற வனப்பு மிக்க தம் உடலை இனி மிகையென அம்மையார் கருதினார். கூத்துடையான் சேவடியைக் கும்பிட்டு, "ஐயனே, கண்டார் வெறுக்கும் பேய் வடிவினை எனக்கு நல்க வேண்டும்" என இறைஞ்சினார். வேண்டுவார் வேண்டுவதே ஈபவன் அல்லவா இறைவன்? அதிலும், அம்மையார் ஏவல் கேட்டு நிற்பதில் அவனுக்குப் பெரு

விருப்பம். ‘மாங்கனி வா’ என்ருல், ஒன்றல்ல, இரண்டு வரும். அது போலவே, இப்போதும், அம்மையாரது வனப்புமிக்க தசைப்பொதி கழிந்தது. மறு கணத்தில், ‘கொங்கை திரங்கி நரம்பெழுந்து குண்டுகண் வெண்பல் குழிவயிற்றுப்’ பேயானுர்.

அம்மையார் வரலாற்றிலே இக்கட்டான இக்கட்டத்தை எழுதும்போது, சேக்கிழாரது இதயத்திலிருந்து குருதி கொட்டுவதைப் பார்க்கிருேம். கண்ணீர் ஆருகப் பெருகுவதைக் காண்கிருேம். பெண் வளர்த்த பாசம் அல்லது பெண்ணை வளர்ந்த பாசம் அவருள்ளத்தில் பீறிட்டெழுகிறது. “அந்தோ, என் அருமை மகளே, ஞானச் செல்வியே, இந்த முடிவுக்குத்தான உன்னை இதுகாறும் 49 பாட்டுகளில் பலவித ஒப்பனைகள் செய்து அழகு பார்த்தேன்? என் தீவினை இருந்தவாறு என்னே!” எனப் புலம்புகிருர் சேக்கிழார். இலக்கியச் சுவையும் நுண்ணுணர்வும் உள்ளவர்களுக்கு இக்காட்சி நன்கு புலனுகும். புராணத்தின் ஐம்பதாம் பாட்டிலே, “மெய்யில் ஊனடை வனப்பை யெல்லாம் உதறி எற்புடம்பே யாகி” என்னும் பகுதியில் ஆசிரியர் வயிறலைத்து வருத்தப்படுவதைப் பார்க்கிருேம்.

ஆனுல், நான் மேற்காட்டிய தாய்க்கும், தாயுள்ளம் படைத்த சேக்கிழாருக்கும் அடிப்படையில் ஓர் வேற்றுமை உண்டு. அந்தத் தாய் தன் மகளின் அவல முடிவுக்குப் பிறகு மனம் உடைந்து, அதே ஏக்கமாகத் தன் வாழ்வின் எஞ்சிய நாட்களைக் கழித்தாள். அதற்கு மாருக, சேக்கிழார் கண்களைத் துடைத்துக்கொண்டு, நம்மைக் கூவி அழைக்கிருர்: “உலகத்தீரே! வம்மின் யான் பெற்றெடுத்த வனப்புமிக்க சிவக்கொழுந்து தானே வேண்டிப் பேய் வடிவம் பெற்றதென்னவோ உண்மைதான். ஆனுல், அஃது எத்தகையது? அதை வானவர் வணங்குகிருர்கள். மண்ணவர் வணங்குகிருர்கள். எல்லாரும் வணங்குகிருர்கள். அந்த வடிவத்திலிருந்து கொண்டுதான் என் அற்புதப் பெண்மணி அற்புதத் திருவந்தாதி பாடப் போகிருள். அவ்வடிவத்தின் பெருமையை அண்டர் நாயகனுர் அறிவார். அன்னை இல்லாத அவர் என்

அம்மையைத் தம் அன்னையாக வரித்துக்கொள்ளப் போகிறார். ஆதலால், நீங்களும் அம்மையை வணங்கி உய்ந்துபோங்கள்.''

இந்த அறைகூவலை 50-ம் பாட்டில் ''வானமும் மண்ணும் எல்லாம் வணங்கு பேய் வடிவ மானார்'' என்னும் பகுதியில் செம்மையாகக் கேட்கிறோம்.

சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் வழங்கிய ''பேயார்'' எனும் சொல்லைச் சேக்கிழார் ஒரேயடியாகப் புறக்கணித்துவிடவுமில்லை. 66 பாட்டுக்கள் கொண்ட வரலாற்றிலே, இரண்டே பாட்டுக்களில் (49, 50) இன்றியமையாமை நோக்கிப் 'பேய்' என்னும் சொல்லை வழங்கியிருக்கிறார். முதலாவது, கதைத் தலைவியின் கூற்றாகவும், இரண்டாவது, கவிக்கூற்றாகவும் அமைந்துள்ளன.

இக்கட்டுரையின் தலைப்பினைப் ''பெண் வளர்த்த பாசம்'' என எழுவாய்த் தொடராகவும், ''பெண்ணை வளர்த்த பாசம்'' என விரிப்பதற்கு இடந்தரும் இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடராகவும் கொள்ளலாம். இலக்கியச் செல்வர்கள் இரண்டிலும் நயம் காண்பார்கள்.

உலகப் பெருங் காவியங்களைப் படைத்த நல்லிசைப் புலவர்கள் தாங்கள் தோற்றுவித்த கதாபாத்திரங்களின் இன்ப துன்பங்களில் எவ்வாறு பங்கு கொள்கிறார்கள் என்பதையும், இந்த அழகுக்குச் சேக்கிழார் எவ்வாறு பேரிலக்கியமாகத் திகழ்கிறார் என்பதையும் ஒருவாறு எடுத்துக்காட்ட முயன்றேன். சேக்கிழாரது தாய்மை உள்ளம் வாழ்க!

இறுதியாக, தமிழிலக்கிய நண்பர்கட்கு ஒரு வேண்டுகோள். நேயர்களே! அடியேனுடைய இக்கட்டுரையினையும் பொருட்படுத்திப் படித்தீர்கள். உங்களுக்கு என் நன்றி. இப்போது, பெரிய புராணத்திலே பெருமிழலைக் குறும்ப நாயனார் வரலாற்றில் இறுதிப் பாட்டையும், காரைக்காலம்மையார் வரலாறு முழுவதையும் ஒருமுறை படித்துவிட்டு, மீண்டும் இக்கட்டுரையைப் படியுங்கள். இதில் ஏதேனும் சுவை இருக்குமானால் அதை நீங்கள் அப்போது இன்னும் நன்றாக உணர்வீர்கள். அதுவே நீங்கள் எனக்குச் செய்யும் கைம்மாறாகும். வணக்கம்.

# வாழ்த்தியல் இன்னுரை*

அன்பிற் சிறந்த பெருந்தகையார்
அமைதி அடக்கம் அருள்ஒழுக்கம்
என்ப பலவும் இயைந்தொளிர்வார்
இராவ்சா கிப்நல் முருகேசர்
முன்பு செய்த புண்ணியத்தின்
முதிர்வாற் றோன்றும் ஜெயவேலு
நன்று சிறந்த ருக்மணியை
நலமே மணந்தார் ! வாழியவே ! 1

அறிவும் திருவும் ஆற்றலுமே
அமைந்து சிறந்த நலங்களெலாம்
செறியப் பெற்றுத் திகழ்ந்தோங்கும்
சீரார் எம்நல் முருகேசர்
நறிய பண்பின் உறைவிடமாய்
நலமே பயந்த ஜெயவேலு
இறையின் அருளால் ருக்மணியை
இனிதே மணந்தார் ! வாழியவே ! 2

சென்னை அரசில் உணவுழவின்
சிறந்த துறைக்குத் துணைச்செயலர்
என்ன விளங்கும் பெருங்குரிசில்
எங்கள் உயர்நல் முருகேசர்
முன்னர்ப் புரிந்த அருந்தவத்தால்
முகிழ்த்து மலர்ந்த ஜெயவேலு
நன்னர் உயர்ந்த ருக்மணியை
நன்றே மணந்தார் ! நனிவாழ்க ! 3

---

*சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத் தலைவர் இராவ் சாகிப் திரு. நல். முருகேச முதலியார், B.A., அவர்களின் புதல்வர் திருமிகு. N. M. ஜயவேலு, B.Sc., அவர்கள் திரு. பி. வி. சஞ்சீவி அவர்களின் புதல்வி திருமிகு. ருக்மணி அம்மையார், B.Sc., அவர்களை மணம் புணர்ந்த ஞான்று சைவ சித்தாந்த மகா சமாஜத்தினரால் 9—2—59ல் வழங்கப்பட்டது.

தக்க சைவ சித்தாந்த
சமாஜத் தலைவர் எனஅமைந்து
மிக்க அன்பிற் கருத்தோடு
விரும்பிப் பணிசெய் முருகேசர்
மக்கள் தம்முள் ஒருவரென
மகிழ உதித்த ஜெயவேலு
ஒக்கல் போற்ற ருக்மணியை
உவந்து மணந்தார் ! மிகவாழ்க ! 4

உண்மை உழைப்பால் சிறப்புற்றார்
உள்ளத் தென்றும் அரசடிக்கீழ்
வண்மை மிக்க கற்பகநல்
விநாய கர்தாள் மறவாதார் !
எண்மை யருமை முருகேசர்
இனிய புதல்வர் ஜெயவேலு
பெண்மை பிறங்கும் ருக்மணியைப்
பெட்பின் மணந்தார் ! வாழ்ந்தொளிர்க ! 5

——

—முருகவேள்

## வரவேற்பு வாழ்த்துப்பா*

பூமிசை யதனுள் பூமிசை வாழும்
திருமகள் நாமகள் மருவுற் றிலகுறும்
தேவ கோட்டைத் திருநகர்ச் செல்வ !
வணிகர் குலத்தினின் வண்மை யாள !
சேவூர்ப் பரமன் சேவடி சிந்தைசெய்
சேவுகச் செம்மல் செய்தவக் கொழுந்து !
உய்வைத் தரச்செய் மெய்யப் பத்திரு
நாமம் பூண்டிடு நேமமீக் கூர்ந்தவ !

---

*தேவகோட்டைத் தனவணிகர் குலதிலகர், சித்தாந்தப் புரவலர், செந்தமிழ்க் கவிஞர், முத்தமிழ் வள்ளல், செல்வச் சீமான் சிவபூசாதுரந்தரர் உயர் சைவத்திரு. உ. ராம. சுப. சேவு. மெ மெய்யப்பச் செட்டியார் அவர்கள் மதுரைச் சைவசித்தாந்த சபை முதலாவது மாநாட்டிற்கு (11—1—1958)த் தலைமை தாங்கியருளியஞான்று மேற்படி சபையாரால் வழங்கப்பட்டது.

அண்டரும் பராவுறும் தண்டமிழ் பயில்வுறும்
மாணவர் தமக்கு வேணவா வுடன்பொருள்
வாரி வழங்கிடும் பாரியின் மேலோய் !
எடகம், இலம்பையங் கோட்டூர், ஐயாறு
ஆதிய பதிகளின் ஆதி பகவற்கு
ஆலயங் கண்ட சீலமார் பெரிய !
எத்திசை யும்புகழ் முத்திக் கையினைத்
தேசா ரந்தணன் ஈசா னப்பெயர்
பூண்ட முனிவன் ஈண்டிய அருளொடு
புரியக் கொண்ட புனிதருட் புனித !
சொன்னய மோடு புன்னகை புரிபவ !
விஞ்சிய புகழுற அஞ்சின் மேலொரு
நாலுங் கண்டருள் நன்மதி யாள !
தண்டமிழ்ப் புலவரைக் கொண்டே யணைத்து
ஆவன வழங்குறும் அந்த ணாள !
மூவுரு வுடைய முதல்வன் பூசனை
கண்டோர் வியப்புறக் கருத்தொரு மித்தே
கண்டிகை யாரம் மண்டிட அணிந்து
நீற்றினை நிறைய நிமிர்வுறப் பூசிப்
போதொடு புரியும் புண்ணிய மூர்த்தி !
சீர்ச்சயங் கொண்ட சோளேச் சுரன்றன்
திருவடி மறவாப் பெருமை யாள !
உடன்பிறந் தாரொடும் உண்மை ஒற்றுமை
ஒழுக்கங் கல்வி உறுதி அன்பு
நாளும் வளர்மார் ஆளும் ஆட்சிய !
மாக்கதை கண்ட சேக்கிழார் பூசனை
கடம்பணி மார்பன் கந்த சட்டி
விழாமுதற் பலவும் விழைவொடு செய்யும்
வள்ளற் பெரும ! வள்ளற் பெரும !
சைவமெய்ச் சமயமே சற்சமயம் என்னச்
சாத்திரங் காட்டுஞ் சதுர ! தண்டமிழ்
நூல்பல ஆயும் நுண்ணிய ! நின்னை
மாநிலம் போற்றும் மதுரையில் அமைந்துள

சைவசித் தாந்தத் தனிப்பெருஞ் சபையின்
முதன்மா நாட்டின் முதல்வனு வேண்ட
இசைவினைத் தந்தே எழுந்தருள் புரிந்தனை !
பூசைநூ லாற்றிய தேசிக ! உலகிற்கு
ஆம்பொருள் கூறி ஆகமம் ஆரணம்
பொதுச்சிறப் பெனலைப் பொற்புற விளக்குக !
இச்சபை என்றும் இலங்கிடு மாறு
நல்லா சிகள்பல நவின்றருள் புரிமதி !
சித்தி விநாயகன், செம்மயி லூர்பரன்,
அங்கயற் கண்ணி தன்னெடும் அமர்ந்தருள்
ஆலவாய்ச் சொக்கர் அருட்பெருக் கின்யாம்
நல்லாறு படஇயர், நாவல ! நீதான்
எண்ணிய எண்ணியாங் கெய்தப் பெற்று
வாழி யூழி வாழியர் பெரிதே !

---

# சமாஜத் தேர்வுகள்

1. இத்தேர்வுகளை நடத்துவதன் நோக்கம் : சைவ இளைஞர்களுக்குச் சாத்திரஞானப் பயிற்சியுண்டாக்குவதற்கும், கலாசாலைகளிலுள்ள தமிழாசிரியர்களும் சிவாலயங்களின் நிர்வாக உத்தியோகத்தர்களும் பிறரும் சாத்திரஞானம் பெறுதற்குமேயாம். இவை 1934-ம் ஆண்டு முதல் நடத்தப் பட்டு வருகின்றன.

2. தேர்வுகளின் பெயர் : (i) இளஞ் சைவப் புலவர் தேர்வு. (ii) சைவப்புலவர் தேர்வு.

3. நடக்கக்கூடிய இடங்கள் : சென்னை, இலங்கை, யாழ்ப்பாணம், சிதம்பரம், தஞ்சை, திருச்சி, மதுரை, திருநெல்வேலி, தூத்துக்குடி, சேலம், கோயம்புத்தூர் வேறு பிற தகுந்த இடங்கள்.

4. பதிவுத்தொகை : (பிரவேசக் கட்டணம்). முதற் றேர்விற்கு ரூ. 3/– இரண்டாந் தேர்விற்கு ரூ. 4/–

5. சேரக்கூடியவர்கள் : முதற்றேர்வு இருபத்தைந்து ஆண்டுகட்குட்பட்ட யாவருக்கும் ; இரண்டாந் தேர்வு யாவருக்கும் உரித்தானது. ஆண்டு உறுதிச்சீட்டு (Age Certificate) தக்கவரிடம் பெற்று அனுப்பல்வேண்டும். சமாஜ அங்கத்தினராகவுமிருக்கவேண்டும்.

6. நடைமுறை : பதிவுத் தொகையுடன் மனுத்தாளனுப்பும் கடைசி தேதி 20-9-59. தேர்வு நடைபெறும் தேதி நவம்பர்மீ மூன்றும் ஞாயிற்றுக்கிழமை. முடிவு வெளியிடல் டிசம்பர்மீ 10உ.

7. பட்டம் வழங்கல், பரிசளித்தல் : சைவசித்தாந்த மகா சமாஜ 54-வது மகா நாட்டில் 1959 டிசம்பர்மீ கடைசி வாரத்தில் நடைபெறும்.

8. தகுதித்தாளும் பட்டமும் : மேற்படித் தேர்வுகளில் ஒவ்வொரு வினுத்தாளிலும் நூற்றுக்கு 40 வீதத்திற்குக் குறையாது வாங்குபவர் மூன்றும் வகுப்பிலும், நூற்றுக்கு 50 வீதத்திற்குக் குறையாது வாங்குவோர் இரண்டாம் வகுப்பிலும், 60 வீதத்திற்குக் குறையாது வாங்குவோர் முதல் வகுப்பிலும் தேறினவராகக் கருதப்படுவர். அதற்குத் தகுந்த தகுதிச் சீட்டுகளும் இளஞ் சைவப் புலவர் சைவப் புலவர் என்ற பட்டங்களும் ஆண்டுவிழாவில் வழங்கப் பெறும். இத்தேர்வுகளில் நூற்றுக்கு 75 வீதத்திற்குக் குறையாது வாங்குபவர்களுக்கு ரூ. 50/–பரிசு அளிக்கப்படும். புத்தக ரூபமாகவோ, பதக்கம் ரூபமாகவோ இப்பணம் வழங்கப்படும்.

9. வினுத்தாள்களின் வகை தொகை : ஒவ்வொன்றும் இரண்டரைமணிப் பொழுதில் எழுதக்கூடிய இரண்டுவினுத் தாள்கள் முதற்றேர்விற்குண்டு. இரண்டாந் தேர்விற்குமப்படியே. ஆனல் ஒவ்வொரு வினுத்தாளும் மூன்றுமணிப் பொழுதும் எழுதக்கூடியதாகலாம். அவை முறையே (i) (ii) என அடியிற் குறிப்பிட்டுள்ள பாடங்களைப் பொறுத்ததாகும்.

10. பாட திட்டங்கள் : இளஞ் சைவப் புலவர் தேர்வு 1959 : I இலக்கியம் : 1. திருக்குறள் அறத்துப்பால் (பரிமேலழகர் உரை), 2. திருநாவுக்கரசர் புராணம் முழுதும்,

3. சமயக் கட்டுரைகள் (பண்டிதமணி கதிரேசஞ்செட்டியார்), 4. முருகன் அல்லது அழகு (திரு. வி. க.) II. சைவ சாத்திரம்: 1. திருவுந்தியார், 2. திருக்களிற்றுப்படியார், 3. திருவருட்பயன், 4 உண்மை விளக்கம்.

சைவப் புலவர் தேர்வு 1959 : I. இலக்கியம்: 1. திருஞானசம்பந்தர் புராணம் முழுதும், 2. திருக்கோவையார் 200 பாடல்கள் (பேராசிரியர் உரையுடன்), 3. திருவாசகம் - திருச்சதகம் (பண்டிதமணி யுரை), 4. சைவ சித்தாந்த ஞான போதம் (மறைமலை அடிகள்), 5. திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே (க. வச்சிரவேல் முதலியார் B A., L.T.) II. சைவ சாத்திரம்: 1. சிவஞானபோதச் சிற்றுரை (சிவஞான முனிவர்), 2. சிவஞானசித்தியார் சுபக்கம் (சிவஞானமுனிவர் உரை), 3. சிவப்பிரகாசம் (மதுரைச் சிவப்பிரகாசர் உரை).

---

# சமாஜ ஆண்டுவிழா

நே. த. கிருஷ்ணசாமி B.A., B.T.

நிகழ் விளம்பி ஆண்டு மார்கழித்திங்கள் 12-ம் நாள் (27-12-58) சனிக்கிழமை தொடங்கி மூன்று நாட்கள் நமது சமாஜத்தின் 53-வது ஆண்டு நிறைவு விழாவும், அதன் அங்கமாகச் சைவர், சைவ மங்கையர், சைவ இளைஞர் மகாநாடுகளும் மயிலம் ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலைய சுவாமிகளின் அருளாதரவின்கீழ் அன்னார் திருமடத்தில் நடைபெற்றன.

முதல்நாள் காலை செந்தமிழ்க் கல்லூரியினின்றும் தலைவர் முதலியவர்கள் மாநாட்டுப் பந்தர்க்கு ஊர்வலமாக வந்தனர். 10 மணிவரை அறுமுகப்பெருமான் திருக்கோயிலில் வழிபாடு நடைபெற்றது. அதுபோது ஸ்ரீலஸ்ரீ ஞானியார் அடிகள் நினைவுமலரும், சிவஞானபோத எளியவுரையும் வெளியிடப் பட்டன. சிறுவர் சிறுமியர் தேவாரம் ஓத மகாநாடு தொடங்கிற்று. வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் தந்தையார் திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் கொடியேற்றி வைத்தனர். சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி ஆர். சுப்பிரமணிய நாடார் அவர்கள் மாநாட்டைத் திறந்து வைத்தார்கள். திறப்புரையில் திரு. நாடார் அவர்கள் சைவசமயம் மற்ற

சமயங்களினும் எவ்வாறு சிறந்ததென்றும், ஜீவன் முக்தர்கள் எவ்வாறு மக்கள் நன்மைக்காக அவதார புருஷர்களாகத் தோன்றுகிறார்களென்றும் விளங்கக் கூறினார்கள். சமாஜச் செயலாளர் ஆண்டு அறிக்கையை வாசித்தபின்னர் மகாநாட்டுத் தலைவர் உயர்திரு. சித்தாந்தசிகாமணி - க. வச்சிரவேல் முதலியார் பி.ஏ., எல்.டி., அவர்கள் தலைமைப் பேருரையை வழங்கினார்கள். அப்பேருரையைச் சித்தாந்தத்தில் படித்துக்கொள்ளவும்.

மாலை 5 மணிக்கு மீண்டும் மாநாடு தொடங்கிற்று. இளைஞர் மகாநாட்டுத் தலைவர் வித்துவான் திரு. அடிகளாசிரியர் அவர்கள் தமது உரையை நிகழ்த்தினார்கள். பின்னர் திரு. மு. அருணாசலம் பிள்ளை M.A. அவர்கள் 'சைவ வாழ்வு' என்பதுபற்றிப் பேசினார்கள். சைவர் சைவமதத்தில் பற்றுக்கொள்ளுவதில்லை ; ஆனால் முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் எவ்வாறு மதநூல்களைப் படிக்கிறார்களென்றும் மதத்தில் எவ்வளவு பற்றுடையவர்களாக இருக்கிறார்கள் என்றும் கூறினார். இந்துக் கோயிலுக்கு முஸ்லிம் தர்மகர்த்தராக நியமிக்கப்படும் அவலநிலை ஏற்பட்டிருக்கிறதென்றும், ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின் இந்துமதம் எந்நிலையில் இருக்கும் என்றும் விளங்கக் கூறினார். நம் பிள்ளைகள் பன்னிரு திருமுறைகளைப் படித்து ஒழுங்கான முறையில் நடக்க வேண்டுமென்று கூறினார். அடுத்துப் பேசிய பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை M.A., B.L., M.O.L. அவர்கள் தலபுராணங்கள் உணர்ச்சிவசப்பட்ட எண்ணங்களென்றும், அவற்றை விஞ்ஞான அளவைகொண்டு அளத்தல் கூடாதென்றும், அவற்றில் விஞ்ஞானத்துக்கும் அப்பாற்பட்ட உண்மைகள் இருக்கின்றன என்றும் கூறினார். குழந்தையை அன்பு வடிவமாகக் காண்கிறோமே யல்லாமல் தசை, எலும்பு முதலியன ஒவ்வொன்றும் எவ்வளவு எடை என்று விஞ்ஞான ரீதியில் காண்பதில்லை. அப்படியே மற்றைய புராணங்களும். தெய்விகத்தன்மையிலிடுபட்டு எழுதியதே புராணக் கதைகள் என்று கூறினார். ஆராய்ச்சிக் கண்கொண்டு புராணங்களை நோக்கினால் விஞ்ஞானமும் அறிவிக்காத சில உண்மைகளைக்

காணலாம் என்று முடிவாகக் கூறினர். தலைவர் கருத்துரை யோடு அவை கலைந்தது. அன்று இரவு பத்துமணிக்கு 'அத்துவிதம்' பற்றிய ஆய்வுக்கூட்டம் ஒன்று நடந்தது.

இரண்டாம் நாள் காலை காஞ்சி மெய்கண்டார் கழகச் சார்பில் ஆலய வழிபாடு நடந்தது. பின்னர்ச் சைவ மாதர் மாநாட்டுக் கூட்டம் தொடங்கிற்று. வித்துவான் திருமதி மங்கையர்க்கரசி அம்மையார் அவர்கள் தமது பேருரையை வாசித்தனர். அவ்வுரையைச் சித்தாந்தத்தில் காணலாம். திருமதி. சு. சிவகாமி அம்மையார் அவர்கள் 'எங்கள் தெய்வம்' என்பது பற்றியும், திருமதி. வி. பத்மாவதி அம்மையார் 'அன்பில் நாம்' என்பது பற்றியும் பேசினர்கள். திருமதி எஸ். விஜயசரஸ்வதி அம்மையார் அவர்கள் 'அம் மையார் கண்ட இல்லறம்' என்பது பற்றிப் பேசினர்கள். காரைக்காலம்மையாரின் சிறந்த பண்புகளை விளக்கினர்கள். இறுதியாகப் பேசிய திருமதி. வரதா. ஜயலட்சுமி அம்மையார் அவர்கள் 'சிவபரத்துவம்' என்ற தலைப்பில் மங்கையர்க் கரசியார் போன்ற முற்காலப் பெண்மணிகளைப் பற்றியும், தற் காலப் பெண்மணிகளைப் பற்றியும் விரிவாகக் கூறினர்கள்.

பிற்பகல் சைவர் மாநாடு தொடங்கிற்று. ஈரோடு-திரு. எஸ். மீனட்சிசுந்தர முதலியார் பி.ஏ., எல்.டி., அவர்கள் 'சைவமும் எதிர்காலமும்' என்ற தலைப்பில் நம்முடைய தற் போதைய நிலையை விரிவாக விளக்கினர்கள். நம் இளைஞர் எவ்வாறு சமய நூல்களைப் படிப்பதில்லை என்றும், எவ்வாறு படிக்காமலும் ஒன்றும் அறியாமலும் சமயத்தைக் குறைகூறு கிறுர்கள் என்றும் விளக்கினர். பண்டை நாளில் தமிழன் கடல் கடந்து சென்று சைவத்தைப் பரப்பினன். இன்றே நம்மவர் வேற்று மதங்களுக்கு மாற்றப்படுகின்றனர். சாத் திரம், தோத்திரம், சரித்திரம் இம்மூன்றுக்குமே வித்தியாசம் தெரியாது நம் மக்களுக்கு. இந்நிலையைப் போக்கவேண்டு மானல் நாம் ஒவ்வொருவரும் தொண்டாற்றுதல் வேண்டும். மதத்தைப் பரப்பத் திட்டமிடல்வேண்டும். அன்றே நாடு நாடாக இருக்கும். இல்லையேல் மதத்தின்பேரால் இன்னும் நம்நாடு பல துண்டுகளாகப் போடப்படலாம் என்று

எச்சரித்தார். பெருஞ் சொற்கொண்டல் திரு. புரிசை. முருகேச முதலியார் அவர்கள் "எது அறம்" என்ற தலைப்பில் உடலுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தை விளக்கி முறைக்குப் பிறழாமல் நடப்பதே அறம் என்று கூறினார்கள். இறுதியாகத் திரு. கி. இராமலிங்க முதலியார் M.A. அவர்கள் 'திருவெம்பாவை' பற்றிப் பேசினார்கள். திருவெம்பாவையின் உட்கருத்துக்களையும் விளக்கினர். பழங்காலத்துப் பெண்மணிகள் எவ்வாறு வாழ்ந்தார்கள் என்பதை அறிய உதவும் நூலாகத் திருவெம்பாவை இருக்கிறதென்றின்னோரன்ன பல கருத்துக்களை அவர்கள் விளக்கினார்கள். தலைவர் முடிவுரையுடன் இரண்டாம்நாள் கூட்டம் முடிந்தது.

மூன்றும் நாட்காலையில் சைவ இளைஞர் மாநாடு நடைபெற்றது. சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள் தொடக்கவிரிவுரை யாற்றினர். திருவாளர்கள்-சா. சண்முக சுந்தரஞ் செட்டியார், அம்பை. சங்கரனார், வி. திருஞானசம்பந்த முதலியார், மறை. திருநாவுக்கரசு, தேமொழி, சைதை. பாப்பாத்தி யம்மாள் முதலியவர்களும் மயிலம் கல்லூரி மாணவர்கள் பற்பலரும் சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர். பிற்பகல் 2 மணி முதல் 4 மணிவரை சமாஜ உறுப்பினர் பொதுக்கூட்டமும் செயற்கூட்டமும் திரு. நல். முருகேச முதலியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றன. மாலையில் கோவை ஸ்ரீலஸ்ரீ சம்பந்தசரணாலயத் தம்பிரான் சுவாமிகள் இளைஞர்களுக்கு வாழ்த்துரை வழங்கியருளினர். திரு. கு. நடேச கவுண்டர், திரு. அடிகளாசிரியர், திரு. வி. குமாரசாமி அய்யர் ஆகியோர் முறையே 'சேக்கிழார் செய்யுட்டிறன்' 'அயரா அன்பு' 'சித்தாந்த சிகாமணி' என்னும் பொருள்கள் பற்றி ஆராய்ச்சி மிக்க அரிய விரிவுரைகள் செய்தனர். மாநாட்டுத் தலைவர் அவர்களின் தக்க முடிவுரைக்குப் பின், ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அரியதொரு சொற்பொழிவு ஆற்றி அனைவர்க்கும் வாழ்த்துரை கூறினர். வரவேற்புச் செயலாளர் வித்துவான் சி. துரைசாமி அய்யர் அவர்கள் நன்றியுரை நவின்றார்கள். வாழ்த்தொலியுடன் விழா இனிது நிறைவேறியது.

---

# 1959-ம் ஆண்டின் சமாஜப் பணியாளர்கள்

மயிலத்தில் 28-12-1958-ல் திரு. நல். முருகேச முதலியார், பி. ஏ. அவர்கள் தலைமையில் நடைபெற்ற சமாஜக் காரியக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பெற்ற சமாஜப் பணியாளர்கள்.

[ஒவ்வொருவர் பெயர் முன்னும் திருவாளர் என்றும், பின் அவர்கள் என்றும் சேர்த்துப் படிக்கவும்.]

தலைவர் : இராவ்சாஹிப் - நல். முருகேச முதலியார், பி. ஏ.; உதவித் தலைவர்கள் : க. வச்சிரவேல் முதலியார்; ச. சச்சிதானந்தம் பிள்ளை; காரியதரிசி : கி. இராமலிங்க முதலியார்; உதவிக்காரியதரிசி : மா. ப. தியாகராஜ முதலியார்; பொருட் காப்பாளர் : சி. என். சிங்காரவேல் முதலியார்; பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி முதலியார்; மாதக் கணிதப் பரிசோதகர் : எஸ். சிவராமன்; ஆண்டுக் கணிதப் பரிசோதகர் : எஸ். டி. அரசு; செயற் குழுவினர் : அ. சோமசுந்தரம் செட்டியார், அம்பை சங்கரனார், என். டி. கிருஷ்ணசாமி முதலியார், நடேச முதலியார், ஜி. வடிவேலாயுதம், பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், கி. வா. கிருஷ்ணமூர்த்தி, ச. சிவகுமாரன், ஜி. கலியாணம் பிள்ளை, டி. வேங்கடாசல முதலியார், ஆர். குழந்தைவேல் நாயகர், இலட்சுமி அம்மாள்.

பத்திராசிரியர் கழகம் :—தலைவர் : புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.; காரியதரிசி: மு. நாராயணசாமி முதலியார்; உறுப்பினர் : நே. த. கிருஷ்ணசாமி முதலியார், சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், தி. கி. நாராயணசாமி நாயுடு, கி. இராமலிங்க முதலியார், அ. கு. காமாட்சியம்மையார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, டாக்டர் வ. ஆ. தேவசேனபதி, வட்டுக்கோட்டை நாகலிங்கம் பிள்ளை, க. வச்சிரவேல் முதலியார், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், க. வெள்ளை வாரணனார்.

ஆராய்ச்சிக் கழகம் : சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், தி. கி. நாராயணசாமி நாயுடு, க. வச்சிரவேல் முதலியார், முத்து - சு. மாணிக்கவாசக முதலியார், ஔவை - சு. துரைசாமி பிள்ளை.

மாவட்ட ஆலோசனைச் சபையினர் :—தஞ்சாவூர் : மு. அருணாசலம் பிள்ளை, எம். ஏ., ரா. ம. சம்பந்தமூர்த்தி முதலியார், மஞ்சக்கொல்லை, கனகசபைப் பிள்ளை - திருக் கடவூர் பிச்சக்கட்டளை எஸ்டேட் ; திருச்சிராப்பள்ளி : அரிமழம் - ஆர். எம். ஏ. என். அண்ணாமலை செட்டியார், ஜி. வரதராஜ பிள்ளை, திருவள்ளுவர் நிலையம் புத்தூர் - திருச்சி ; அரிமழம் - பி. எம். ஆர். செல்லப்பச் செட்டியார்; குமரி : ஜி. வன்னிநாயகம் பிள்ளை, நாகர்கோயில் - ஆறுமுக நாவலர் ; திருநெல்வேலி : மறை. திருநாவுக்கரசு, சி. எஸ். அருணாசலம் பிள்ளை - கணபதி மில்ஸ், தெ. கணபதியப்பன்- தென்காசி - செயலாளர் திருவள்ளுவர் கழகம் ; இராமநாத புரம் : சேவு. மெய்யப்பச் செட்டியார், சொ. நாராயணன் செட்டியார் காரைக்குடி, முத்துப்பட்டணம் - சி. டி. எம். என். நாராயணன் செட்டியார், ஆட்டங்குடி-ராமநாதபுரம்; மதுரை : க. அரங்கசாமி முதலியார், பழனி, வி. வி. சி. ஆர். முருகேச முதலியார், மதுரை, ஔவை - துரைசாமி பிள்ளை; வட ஆர்காடு : கா. மு. சுந்தர உடையார், புரிசை - முருகேச முதலியார், வி. எஸ். இராஜமாணிக்கம்-வேலப்பாடி-ஆரணி; கோவை : கே. பி. ஆர். சுப்பராயன்-சிவகிரி, எஸ். மீனாட்சி சுந்தர முதலியார், சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார்; சேலம் : காமாட்சி அம்மாள், ஆர். எம். மாணிக்கம் பிள்ளை, போத்தனூர் - வேலூர் ; ஆர்காடு : தி. கி. நாராயணசாமி நாயுடு, கே. எம். பெரியதம்பி - கள்ளக்குறிச்சி, எம். தண்ட பாணி முதலியார், தர்மகர்த்தா - புதுவண்டிப் பாளையம் கடலூர் ; செங்கல்பட்டு : வா. தி. மாசிலாமணி முதலியார், சி. காளப்ப முதலியார் - முத்தமிழ் அச்சகம் - காஞ்சி புரம், ஜே. கு. வரதராஜ முதலியார், குன்றத்தூர் ; பெங்க் ளூர் : குகன் பிரஸ் - ஆ. ர. அண்ணாமலை முதலியார் ; புதுச் சேரி : சேனாபதி முதலியார், காமாட்சி அம்மன் கோயில் தெரு ; கொழும்பு : ஸர். கந்தையா வைத்தியநாதன், சு. நடேசப் பிள்ளை, அருள் தியாகராசா, டி. எஸ். சோமசுந் தரம் ; யாழ்ப்பாணம் : வ. நாகலிங்கம், ஏ. அருளம்பலம், முத்துத்தம்பி, அம்பிகைபாகன், கே. பாலகிருஷ்ணன் ; மலேயா : கா. இராமநாதன் செட்டியார், சிவநேயன், கோவிந்தசாமிபிள்ளை, அ. மு. பெரியசாமிபிள்ளை, பழநி வேல் பிள்ளை, ஆர். வி. கந்தையா.

---

# மதிப்புரை

மெய்கண்டார் வரலாறு: இந்நூல், ஆசிரியர் மெய்கண்டார் பெருமான் தோன்றியருளிய திருப்பெண்ணாகடத்தில் சிறந்த சிவநெறிச் சீலராய்த் திகழ்ந்து வரும் வழக்கறிஞர் திரு. ச. அரங்கசாமிப் பிள்ளை அவர்களால் இயற்றி வெளியிடப் பெற்றதாகும். திரு. ச. அரங்கசாமிப் பிள்ளை அவர்கள் சிவநேயம் சிவனடியார் நேயங்களிற் சிறந்து விளங்குபவர்கள். ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம் முதலிய உயர் பண்பு நலங்கள் பலவும் வாய்ந்தொளிரப் பெற்றவர்கள். நமது சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 51-ஆம் ஆண்டு நிறைவு விழா திருப்பெண்ணாகடத்தில் சிறப்புற நன்கினிது நடைபெறுதற்குப் பெருந்துணை புரிந்த பெரியார்கள் பலருள் ஒருவர். பெண்ணாகடம் கிராமத்தில் களப்பாளமேடு என்ற நிலத்தில் ஒரு பகுதியை விலைக்கு வாங்கி, அங்கு மெய்கண்டார் நிலையம் என்று ஒரு திருக்கோயில் எடுப்பித்து, மெய்கண்டாரின் திருவுருவப் படிமத்தினை நிலைநிறுத்திக் குடமுழுக்குச் செய்யப்படவும், மெய்கண்ட நூற்பொருள்கள் விரிவுரைகள் வாயிலாக விளக்கப் பெறவும் ஒரு காரணராக இருந்து இடையறாமற் சிவத்தொண்டு ஆற்றி வருபவர்கள். இத்தகைய சிவ நெறித் திருவினராகிய பிள்ளை அவர்கள் எழுதிய இந்நூலின்கண் பெண்ணாகடத்தின் பெருமை, மெய்கண்டார் அவதாரம், மெய்கண்டாரின் வாழ்க்கை, மெய்கண்டாரின் மாணவர்கள், மெய்கண்டார் வம்ச பரம்பரையும் காலமும், மெய்கண்டார் சமயம் என்பன போன்ற தலைப்புக்களில் அரிய பொருள்கள் பல ஆராயப்பட்டுள்ளன. கல்வெட்டுகள் செப்பேடுகள் வரலாற்று நூல்கள் சமய நூல்கள் ஆராய்ச்சி நூல்கள் ஆகிய பலவற்றையும் படித்துணர்ந்த குறிப்புக்களை, திரு. பிள்ளை அவர்கள் இதன்கண் சுருக்கமாகத் தந்துள்ளார்கள். முதல் அனுபந்தமாகக் கொடுக்கப்பட்டுள்ள மெய்கண்டார் சந்தான மரபு விவரம் ஆராய்ச்சியாளர்களுக்குப் பெரிதும் பயன்படும். மெய்கண்டாரின் முன்னோர்களுக்குக் கொடுக்கப் பெற்ற செப்புப்பட்டயமும், திருச்செங்காட்டங்குடிக் கார்காத்தார் மடத்துத் தரும பட்டயமும் பிற்சேர்க்கைகளாகத் தரப்

பெற்றுள்ளன. திரு. பிள்ளை அவர்களின் சிவநெறிப் பேரன்பையும் செந்தமிழ் ஆர்வத்தையும் பெரிதும் புலப்படுத்தி நிற்கும் இந்நூல், திருத்தங்கள் சில செய்யப் பெற்று இரண்டாம் பதிப்பாக வெளி வந்துள்ளது. இதன் விலை அணா நான்கு. வேண்டுவோர்—புதுமைப் பிரசுரம் (பெண்ணாகடம்), அமுதமொழி நூலகம் (விருத்தாசலம்), மணிவாசக மன்றம் (அரியலூர்), மௌனசாமி மடம் (சிதம்பரம்), பாரி நிலையம் (சென்னை) முதலிய இடங்களிற் பெறலாம்.

—முருகவேள்.

---

*Statement about ownership and other particulars about*

## "SIDDHANTAM"

| | |
|---|---|
| 1. Place of Publication | ...14, Warren Road, Madras-4 |
| 2. Periodicity of its Publication | ...Monthly |
| 3. Printer's Name | ...D. Mangayarkarasi & V. K. Punithavathi |
| Nationality | ...Indian |
| Address | ...15, Madhava Perumal Koil St., Mylapore, Madras-4 |
| 4. Publisher's Name | ...S. Satchidanandam Pillai |
| Nationality | ...Indian |
| Address | ...175-A, Lloyds Road, Madras-14 |
| 5. Editor's Name | ...Pulavar Murugavel, M. O. L. |
| Nationality | ...Indian |
| Address | ...27, Chetty Street, Madras-15 |
| 6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | "Saiva Siddhanta Mahasamajam" with no shareholders or partners, but only members paying subscriptions. ["Siddhantam" is not a newspaper] |

I, S. Satchidanandam Pillai hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Signature of Publisher: (Sd.) S. Satchidanandam Pillai.

Dated, 10—3—1959

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் திருநெறி இசை வகுப்பைத் தொடங்கி வைத்தார்கள். திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம். ஏ., அவர்களின் பொருளுதவிகொண்டு நடைபெறும் இவ்வகுப்பினைத் தேவாரம் - க. நடராசன் அவர்கள் ஆசிரியராக இருந்து நடத்திவருகின்றார்கள்.

சாது அச்சுக்கூடமும், முருகவேள் புத்தகசாலையும் (15, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை-14) பழைய இடத்திலிருந்து 15, மாதவப்பெருமாள் கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை-4 என்ற புது இடத்திற்கு மாற்றப்பட்டதால் இவ்விதழ் வெளிவரக் காலந்தாழ்த்தது.

——

## பிரிவாற்றாமை

சிறந்த சிவபக்த சீலரும், சிதம்பரத்தில் அண்மையில் நிகழ்ந்த கும்பாபிஷேகத்திற்குப் பெரும்பொருள் வழங்கிய வள்ளலுமாகிய திரு. ஆடிர்-எம். இரத்தினசபாபதிப் பிள்ளை அவர்கள், சமாஜப் பொன்விழா வரவேற்புக் குழுவின் தலைவராக இருந்து பெருந் தொண்டாற்றிய பெருந்தகை. அவர்களின் மறைவைக் குறித்துச் சமாஜம் தனது பெரு வருத்தத்தை அவர்களுடைய குடும்பத்தினர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறது. அம்பலவாணரின் திருவடிக்கீழ் அவர்தம் அருயிர் என்றும் வைகி இன்புறுவதாக!



சமாஜப்பேரன்பரும், ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள்பால் நீண்டகாலம் நெருங்கிய தொடர்புகொண்டிருந்த பெருந்தகையாரும் ஆகிய தாம்பரம் - திரு. டாக்டர். S. பாலவேலாயுதம் பிள்ளையவர்களின் மூத்த புதல்வர் திரு. பாலவிநாயகமூர்த்தி அவர்கள், நல்ல கட்டிளமைப் பருவத்தே மறைய நேர்ந்தமை குறித்துச் சமாஜம் பெரிதும் வருந்துகின்றது. தமது முதுமை மிக்க வயதில் அரும் பெறற் புதல்வரை இழந்து வருந்தும் திரு. 'டாக்டர்' அவர்களுக்கும், சைவ நலங் கெழுமிய அவர்தம் குடும்பத்தினர்க்கும் சமாஜம் தனது ஆறுதலுரைகளைத் தெரிவித்துக் கொள்கின்றது.

Regd. M. 2330 "SIDDHANTHAM" Vol. 32—No. 3

## மலேயா அன்பர்களுக்கு வரவேற்பு

மலேயாவிலிருந்து திரு. கே. இராமநாதன் செட்டியார் பி.ஏ., பி.எல். அவர்கள் 20 சிவநேயச் செல்வர் செல்வியர்களுடன் இந்தியா முழுதுமுள்ள மிக முக்கியமான தலங்களைக் கண்டு வழிபடுவதற்காக, 5-3-59 அன்று சென்னைக்கு வந்து, ஸ்ரீ கபாலீச்சரத்தில் மாலை 6 மணிக்கு வார வழிபாடு நடத்தினார்கள். அதுசமயம் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் அவர்களுக்கு வரவேற்பு நல்கி அவர்களுடைய இந்தியத் தல யாத்திரை இனிது நடந்தேறும்வண்ணம் பிரார்த்தனையும் செய்யப்பட்டது. அப்போது திரு. சி. இராமலிங்க முதலியார், எம்.ஏ., வித்துவான் - திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், புலவர்-முருகவேள் ஆகியோர் வரவேற்புரை நிகழ்த்தினர்.

---

## சமாஜ நிர்வாக சபைக் கூட்டம்

15-2-59 ஞாயிறன்று காலை 9-30 மணிக்கு ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் கூட்டம் நடைபெற்றது.

22-3-59 ஞாயிறன்று காலை 9-30 மணிக்கு இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில், சமாஜ நிர்வாகக் கூட்டம் நடைபெறும்.

---



---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O L. & Published by S. Satchidanandam Pillai, B A:, L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.